இன்ஸ்பெக்டர்
ஆசாத்
துப்பறியும்,






# நடிகை சுரேகா!



# ரூ.1000 பரிசு! கட்டுரைப் போட்டி!

உலகில் மிகப்பெரிய கற்பனை கதாநாயகன் ஆன 007 ஜேம்ஸ்பாண்ட் கதைகளை "ராணி காமிக்ஸ்"சில், நீங்கள் தொடர்ந்து படித்து வருகிறீர்கள். "அழகியைத் தேடி...!" என்ற முதல் கதையில் தொடங்கி, "கடல் பூதம்" வரை 17 கதைகள் இதுவரை வெளியாகி உள்ளன. இனியும் தொடர்ந்து வெளியாகும்.

இந்தக் கதைகளில், நாட்டுப்பற்று, கடமை உணர்வு, வீரம், மேல் அதிகாரிக்கு கீழ்ப்படிதல், சமயோஜித புத்தி, துன்பத்தைத் தாங்கும் மனப்பக்குவம், குறிக்கோளை நிறைவேற்ற இரவு—பகலாக உழைத்தல்—என்பவை போன்ற பல்வேறு சிறப்பு அம்சங்கள் பின்னிப் பிணைந்து கிடப்பது கண்கூடு.

அவற்றை வைத்து வாசகர்களுக்கு ஒரு கட்டுரைப் போட்டியை இங்கே அறிவிக்கிறோம்.

**தலைப்பு: ஜேம்ஸ் பாண்ட் கதைகளில் மேலோங்கி நிற்பது — நாட்டுப்பற்று   கடமை உணர்வு   வீரம்.**

—இந்த மூன்றில் ஏதாவது ஒன்றை வைத்து கட்டுரை எழுதி அனுப்புங்கள். கட்டுரைகள், ராணி காமிக்ஸ் அச்சிடும்போது 2-ல் இருந்து 3 பக்கத்துக்குள் இருக்க வேண்டும். தேர்வு பெறும்—

**முதல் கட்டுரைக்கு பரிசு ரூ. 350/-**
**2-வது கட்டுரைக்கு பரிசு ரூ. 300/-**
**3-வது கட்டுரைக்கு பரிசு ரூ. 250/-**

இவை தவிர 2 கட்டுரைகளுக்கு தலா ரூ. 50/- வீதம் ஆறுதல் பரிசும் உண்டு. (ஆகமொத்தம் பரிசுத் தொகை ரூ. 1,000.)

கட்டுரைகள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி 10-4-1986.

வெற்றி பெற்றவர்கள் விவரம் 1-5-86 இதழில் வெளிவரும். (முதல் மூன்று பரிசுகளைப் பெற்றவர்கள் மட்டும் உடனே பாஸ்-போர்ட் அளவு போட்டோ அனுப்ப வேண்டும்)

பரிசு பெற்ற 3 கட்டுரைகளும் 15-5-86, விடுமுறை மலரில் அந்தப் படங்களுடன் வெளிவரும்.

போட்டியில் கலந்துகொள்ள வயது—வரம்பு கிடையாது. தேர்ந்து எடுக்கப்படாத கட்டுரைகளை திருப்பி அனுப்ப இயலாது. போட்டியில் ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

கட்டுரைகளை அனுப்ப வேண்டிய முகவரி:
007 கட்டுரைப் போட்டி,
ராணி காமிக்ஸ்,
1091, பெரியார் நெடுஞ்சாலை,
சென்னை-7.



ராணி காமிக்ஸ்—41
(மாதம் இருமுறை இதழ்)
மார்ச் 1—14
1986

# இன்ஸ்பெக்டர் ஆசாத் துப்பறியும் நடிகை சுரேகா!







போலீஸ் சூப்பிரெண்டின் மகளான மீரா, ஆசாத்தின் காதலி,







இங்கே உள்ள பூக்கள் என் மனதை கவர்கின்றன!
என் மனதை நீதான் கவர்கிறாய்!


ஆசாத்! அது என்ன பறவை!
பருந்து மாதிரி தெரியுது!


அதைப் பார்க்காமலேயே சுட்டு வீழ்த்த முடியுமா?


அதைப் பார்க்காமல் சுடுகிறேன். என்ன பரிசு தருவாய்?


பருந்து பறப்பதை தண்ணீரில் பார்த்து ஆசாத் குறி வைத்தார்.


துப்பாக்கி சத்தம் அங்கே எதிரொலிக்க, பருந்து கீழே விழுந்தது.
கிரீச்...கிரீச்...


காயம் அடைந்த அந்த வல்லூரை மீரா தூக்கினாள்.
ஆசாத்! இதன் காலில் ஒரு குழாய் கட்டப்பட்டு உள்ளது!


அந்தக் குழாயை எடுத்த ஆசாத்—
மீரா! அதில் ஒரு தாள் இருக்கு! ஏதோ ரகசிய செய்தி!


இந்தத் தாளில், "23-ந் தேதி காலை விமானத்தில் பம்பாய் வருகிறேன்" என்று எழுதப்பட்டு உள்ளது. குருதத் என்று கையெழுத்து உள்ளது.


கொள்ளைக்காரன் குருதத்தா?


மீரா! நான் உடனே போலீஸ் தலைமை நிலையம் போகணும்!


எஸ். பி. ஆபீசில்—
என்ன ஆசாத்! 15 நாள் லீவு போட்டுவிட்டு உடனே திரும்பி-விட்டாயே!


சார்! இந்த காகிதத்தில் உள்ள செய்தியை படியுங்க... ஏதோ நடக்க இருக்கு!


அதை படித்த எஸ். பி.—
பருந்து காலில் இந்தச் செய்தி கட்டப்பட்டு இருந்தது.
கொள்ளைக்காரர் குருதத் பம்பாயில் ஏதோ பெரிய கொள்ளையில் ஈடுபட இருக்கிறான்!


நான் உடனே பம்பாய் புறப்பட்டு போகிறேன்!


விமான நிலையத்தில் இருந்து குருதத்தை பின்தொடர்வேன்.
அப்படியே செய்!


ஆதாத்! பம்பாயில் குருதத் தன் கைவரிசையைக் காட்டப் போகிறான் என்றால், அதில் வேறு சிலரும் சம்பந்தப்பட்டு இருக்க வேண்டும்!


நான் ரகசியமாக அதை துப்பு துலக்குகிறேன்.


அவர்கள் திட்டத்தை முறியடித்து கைது செய். நீ பம்பாய் போக ஏற்பாடு செய்கிறேன்!


பம்பாய் விமான நிலையம்.
அலோ ஆசாத்!
அலோ சுரேகா!
அது சினிமா நடிகை சுரேகா. அவள் ஆசாத்துக்கு பழக்கமானவள்.


ஆசாத்! நீங்க பம்பாய் வருவதா போன் பண்ணியபோது நான் நம்பலே இல்லே!


வாங்க! என் வீட்டிலேயே தங்கலாம்!
ஆபீஸ் வேலையாகத்தான் வந்தேன்!


எனக்கு இன்றைக்கு ஷூட்டிங் இருக்கு. சண்டைக் காட்சி. பார்க்க வாரீங்களா?


சாரி சுரேகா! அவசர வேலே இருக்கு.


பம்பாய் தலைமை போலீஸ் நிலையம்.
ஆசாத் வாங்க! நீங்க வர்றதா உங்க எஸ். பி. போன் பண்ணி சொன்னாரு!


இன்ஸ்பெக்டர் காமத்! உங்க உதவி தேவை!
உங்களுடன் ஒத்துழைக்க எனக்கு உத்தரவு இருக்கு!


சாதாரண உடையில் சில போலீசாருடன் ஆசாத் விமான நிலையம் போகிறார்.
ஃப்ளைட் நம்பர் 203-ல் வரும் பயணிகள் பெயர் விவரத்தைப் பார்க்கலாமா?
ஓ! ஸார்!


குருதத் என்ற பெயர் லிஸ்டில் இல்லையே!


ஒருவேளை, வேறு பெயரில் வருவாரோ?


பிளைட் நம்பர் 203க்கு உரிய விமானம் வந்து இறங்கியது.


ஆசாத் அதோ அவர்தான் கடைசி பயணி!


அவன்தான் குருதத்! அவனை வரவேற்க யாராவது வந்து உள்ளனரா?


விமான நிலையத்தில் இருந்து குருதத் வெளியே வந்தான்.
என்னை அழைக்க யாரும் வர வில்லையா?


பிறகு குருதத், ஆத்திரமாக ஒரு பொது தொலைபேசி கூண்டுக்குள் நுழைந்தான்.


அலோ! அலோ!


ஆசாத் அவனை ரகசியமாக கண்காணித்தார்.


குருதத் பேசறேன்! மஸ்தான் சார் இருக்காரா?


குரு! மஸ்தான்தான் பேசறேன். எப்போ வந்தே?


என்ன சார் இது? நான் அனுப்பிய செய்தி கிடைக்க வில்லையா?


குரு! நீ அனுப்பிய 3 பருந்துகளும் வந்து சேர்ந்தன. 4—வது வரவில்லை.


ஆசாத் கூட்டது.
போகட்டும். உடனடியா ஒரு காரை அனுப்புங்க. இன்ஸ்பெக்டர் ஆசாத் இங்கே இருப்பது போல் தெரியுது.


TELEPHONE
உடனே கார் அனுப்புகிறேன். இங்கே வந்துவிடு.


கொஞ்ச நேரத்தில் ஒரு அழகிய கார் வர, குருதத் ஏறினன்.
டிரைவர் வேகமா போ!


பின்னல் ஒரு டாக்சி வர ஆசாத்—
FOR HIRE
டிரைவர்! அந்தக் காரை பின்தொடர்!


சாரி சார்! நான் வேறு ஒரு வேலையா அமர்த்தப்பட்டு இருக்கேன். வரமுடியாது!


நீ ரொம்ப வேகமா ஓட்டுறே. உன் பெயர் என்ன?
என் பெயர் பில்லா. காரை வேகமா ஓட்டச் சொல்ல என்ன காரணம்?


ஒரு இன்ஸ்பெக்டர் பின் தொடரப் பார்த்தார். டாக்சி டிரைவருக்கு பணம் கொடுத்தேன்.
அவன் போக மறுத்து இருப்பான்!


பம்பாயின் சுற்றுப்புறத்தில் இருந்த ஒரு பங்களாவுக்கு அந்தக் கார் வந்து நின்றது.
இது ரொம்ப பாதுகாப்பான இடம் மாதிரி தெரியுதே!
ஆமா! போலீஸ் கண்ணில் படாமல் இருக்க அருமையான இடம்!


வா! குரு வா! உட்கார் பேசலாம்!


இன்ஸ்பெக்டர் ஆசாத் நம்மைக் கண்காணிக்கலாம் என்ற சந்தேகம் இருக்கு!


சரி, அதுபற்றி பிறகு பார்ப்போம். இப்போ நமது ஆட்களை அறிமுகம் செய்து கொள்!


இவன் பெயர் தாஸ். வங்காளத்தைச் சேர்ந்தவன். எந்த பூட்டையும் லாவகமா உடைக்கக்-கூடியவன்!
தாஸ் உன்னை சந்திப்பதில் மகிழ்ச்சி!


பாஸ்! யார் இந்த அழகி? பொம்மை மாதிரி!


மபியா என்ற கள்ளக் கடத்தல் கும்பலின் தலைவனான மஸ்தான், அந்தப் பெண்ணை அறிமுகம் செய்து வைத்தார்.
இவள் பெயர் மல்லிகா. தமிழ்நாட்டைச் சேர்ந்தவள். யாரையும் எந்த நேரத்திலும் சுட்டுக் கொல்ல இவளுக்கு அதிகாரம் அளித்து இருக்கேன்.
சுடுவதில் நம்பர்-1.


இவள் துப்பாக்கி சுடுவது ஒரு வித்தை. அதை நாம் பார்க்கலாமா?
அப்போது கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது.
தட் தட்
யார் அது?


குருதத் கதவைத் திறந்து—
யார் நீ? என்ன வேண்டும்?
இந்த வீட்டு டெலிபோனுக்கு டயல் செய்து கிடைக்கவில்லை என்று புகார்கள் வந்துள்ளன. போனை சரி பார்க்க வந்து இருக்கிறேன்!


டெலிபோன் மெக்கானிக் பற்றி குருதத் மஸ்தானிடம் சொல்ல—
ஏய் மெக்கானிக்! போன் அங்கே இருக்கு! சீக்கிரம் முடி!


குரு! கடைசியா நாம் என்ன பேசினேம்?


மல்லிகா, துப்பாக்கியால் வித்தை காட்டுவாள் என்று சொன்னீர்கள்!


நான் துப்பாக்கி வித்தையை ஏற்கனவே காட்டிவிட்டேன்!


என்ன?


யாரும் அதிசயிக்க வேண்டாம். எனக்கு உள்ள அதிகாரத்தின்படி ஒருவனை இங்கே கொன்று விட்டேன்!


என்ன? இங்கே ஒருவனைக் கொன்று விட்டாயா?
நாங்கள் எல்லோரும் உயிரோடு இருக்கோமே!
மல்லிகா! ஜோக் அடிக்கிறாயா?


அங்கே பாருங்க!


அடுத்த அறையில் டெலிபோன் மெக்கானிக் ரத்த வெள்ளத்தில் பிணமாக கிடந்தான்.
பாவம்! இறந்து விட்டான்!


மல்லிகா! நீ ஏன் அவனைக் கொன்றாய்?
இந்த துப்பாக்கி சத்தம் இல்லாமல் வெடிக்கக்-கூடியது.
ஆனா, இவன் டெலிபோன் இலாகாவைச் சேர்ந்தவன் இல்லை.


இவன் போலீஸ் சி. ஐ. டி. நம்மை உளவறிய வந்து இருக்கான். அதைப் புரிந்து கொண்டதும் சுட்டுக்-கொன்றேன். சரிதானே!


நடிகை சுரேகா வீட்டில்—
ஆசாத்! உங்களுக்கு வசதியா இருக்கா, இந்த அறை?
வசதியை அனுபவிக்க நேரம் இல்லே.


சுரேகா! மஸ்தான் என்ற தொழில் அதிபரை கேள்விபட்டு இருக்கிறாயா?
ஓ! கேள்விபட்டு உள்ளேனே!


அவர் சினிமாவுக்கு முதலீடு செய்கிறார். பெரிய பைனான்சியர். அவரைப் பற்றி என்ன?


அவர் பெரிய கடத்தல்காரர். மபியா என்ற சர்வதேச கடத்தல் கும்பலைச் சேர்ந்த பெரிய புள்ளி. இங்கே ஒரு கொள்ளை நடத்த திட்டமிடுகிறார்!
எங்கள் சி. ஐ. டி. ஒருவன் அவர் ரகசிய தலைமை நிலையத்தை கண்டு பிடித்துவிட்டான். பிறகு ஒரு ரகசிய போலீசை அங்கே அனுப்பி வைத்தோம்.


ஆனால் மஸ்தான்
அவனை தீர்த்துகட்டிவிட்டார்
போல் தெரியுது. ஆனால்
சி. ஐ. டி. அங்கே போனில்
ஒட்டு கேட்கும் கருவியை
பொருத்திவிட்டான்.


மஸ்தான் பங்களா...
பாஸ்! நமது திட்டத்தை
ஒத்தி போடுவது
நல்லது!


நம் இடத்தை
போலீசார்
இரவு பகலாக
கண்காணிப்பதா
தெரிகிறது!
பயப்படாதே
குரு!


நமது
திட்டத்தை
நிறைவேற்ற
எல்லா
ஏற்பாட்டையும்
செய்து
விட்டேன்.


இனி பின்வாங்க முடியாது குரு! நீ தைரியத்தை கைவிடாமல் காரியத்தில் இறங்கு!


வெற்றி நமக்குதான்!


பம்பாயில் உள்ள போலீஸ் தலைமை நிலையம்.
இன்ஸ்பெக்டர் காமத்! எல்லா ஏற்பாடுகளையும் செய்தாகி-விட்டதா?


மஸ்தான் கூட்டத்தின் சதி திட்டத்தின் முழு விவரமும் நமக்கு கிடைத்துவிட்டது மிஸ்டர் ஆசாத்!


மஸ்தானைச் சேர்த்து 5 பேர் சம்பந்தப்பட்டு உள்ளனர்!


பூட்டை உடைக்கும் தாஸ், வேக டிரைவர் பில்லா, அழகி மிஸ் மல்லிகா, பிறகு கொள்ளைக்காரன் குரு!


5 பேரும் சேர்ந்து ஒரு பாங்கை கொள்ளை அடிக்க திட்டம் போட்டு உள்ளனர். அது நாளை மறுநாள் நடக்கும்.


அப்படியானால் உடனடியா போய் 5 பேரையும் கைது செய்து விடுவோம்!


ஜீப் புறப்பட்டது.
பங்களாவைச் சுற்றி நம் ஆட்கள் இருக்கிறார்களா?
எஸ், ஆசாத்!


மஸ்தான் பங்களாவை போலீசார் அடைந்ததும் ஆசாத்—
நீங்க பங்களாவை சுற்றி வளையுங்க. காமத்! நீங்களும் உங்க போலீசாரும் என்னுடன் வாங்க!


கையில் துப்பாக்கியுடன் பங்களாவுக்குள் ஆசாத்—
குவிக்! இடது புறம் போங்க!

அழைப்பு மணியை அழுத்தினார். பிறகு கதவை தட்டினார். கதவு திறக்கவில்லை.







அடுத்த சில நிமிடங்களில் கதவு உடைத்து திறக்கப்பட்டது. உள்ளே—




தேடிய போலீஸ்காரர் ஒருவர் சத்தம் போட்டார்.
என்ன அது?


ஒரு பிணம்!
எனது அனுமானம் சரியாகிவிட்டது!
சுட்டுக் கொல்லப்பட்ட ரகசிய போலீஸ் பிணம்தான் அது.


பங்களா முழுவதும் தேடும் படலம் நீடித்தது.
ஆசாத் இங்கே பாருங்க!


அவர்கள் இந்த வழியாகத்தான் தப்பி போய் இருக்க வேண்டும்!


கொள்ளைக் கூட்டத்தினர் அனைவரும் தப்பிவிட்டது ஆசாத்துக்கு அதிர்ச்சியை கொடுத்தது.
இது பெரிய ஏமாற்றம்!


உடனடியாக போலீஸ் இலாகா முழுவதும் சுறுசுறுப்பு அடைந்தது.
எல்லா போலீஸ் நிலையங்களுக்கும் தகவல் கொடுங்க!


கொள்ளையர் பற்றிய விவரத்தை தெரியப்படுத்தி உஷார் படுத்துங்க!
எஸ் சார்!


மிஸ்டர் காமத்! எல்லா பாங்குகளையும் எச்சரிக்கை செய்யுங்க!


பாதி பாங்குகளுக்கு மேல் தகவல் சொல்லியாச்சு. பிற்பகலில் மற்ற பாங்குகளையும் எச்சரிக்கை செய்து விடலாம்!


ஆனால் ஒரு மாதம் ஆகியும் பாங்கி கொள்ளை நடக்கவில்லை.
ஆசாத்! நீங்க ஊர் திரும்புவதா முடிவு செய்துவிட்டீர்கள், இல்லையா?
ஆமா.


கொள்ளைக் கூட்டத்தைத் தேடுவதில் ஒரு மாதம் ஓடிவிட்டது.


கொள்ளைத் திட்டத்தை அவர்கள் கைவிட காரணம்?
போலீஸ் உஷார் அடைந்ததை அறிந்து கைவிட்டு இருக்கலாம்.


அவர்கள் சர்வதேச கடத்தல் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். வேறு நாடுகளுக்கு கூட ஓடி இருக்கலாம்!
டிரிங்...டிரிங்...
ஆசாத் விமான நிலையம் புறப்பட்டபோது போன் அடித்தது.


சுரேகா போனை எடுத்தாள்.
ஆசாத்! உங்களுக்கு!
எனக்கா?
யாரோ அவசரமா கூப்பிடுறாங்க!


ஆசாத் ரிசீவரை வாங்கினார்.
மிஸ்டர் ஆசாத்தா? கிராண்ட் இன்டர்நேசனல் பாங்க் மானேஜர் பேசறேன்!
நான் உங்களுக்கு என்ன செய்யணும் சார்?


பணம் கொண்டு வரும் எங்கள் வேன் வரவில்லே!


வேன் வரவில்லேயா? வழக்கமா எப்போ வரும்?


வழக்கமா காலே 10–15க்கு வந்துவிடும். மணி 11 ஆகியும் வராததால் சந்தேகமா இருக்கு. வேன் நல்ல கண்டிசனில் இருந்தது. அதனுல் ரிப்பேர் ஏற்பட காரணம் இல்லே


வழியில் ரிப்பேர் என்ருல் டிரைவர் போன் செய்திருப்பார். இல்லேயா?
ஆமா!


அந்த வேனில் 100 ரூபாய் நோட்டு கட்டுகள் ஐந்து இருந்தன. ஒவ்வொரு கட்டும் 10 லட்சம். மொத்தம் 50 லட்சம் ரூபாய் இருந்தது.


அதைக் கேட்டு ஆசாத் அதிர்ந்தார்.
சுரேகா! என் விமான டிக்கெட்டை ரத்து செய். பெரிய பாங்கி கொள்ளே நடந்து விட்டது!


போலீஸ் தலைமை நிலையம்.
சார்! உங்க உத்தரவுப்படி எல்லா போலீஸ் நிலையங்களையும் உஷார் செய்து விட்டோம்! விமான நிலையத்துக்கு போலீஸ் படை விரையுது!
அலோ! அலோ! "மொபைல்" போலீசா! காணாமல் போன பாங்கி வானை கண்டு பிடியுங்க. அதன் நம்பர்...


மிஸ்டர் ஆசாத்! இந்த பாங்கி வேனை, மஸ்தான்—குருதத் கோஷ்டி கொள்ளை அடித்து இருக்கும் என நம்புறீங்களா?


ஆமா, காமத்!
அப்படியானு அவங்க ஏன் ஒரு மாதம் தலைமறைவு ஆகணும்?
போலீஸ் உஷார் அடைந்ததும் பாங்கிக்குப் பதில் பாங்கி வானை கொள்ளை அடிக்க திட்டம் போட்டிருக்கலாம்.


நம் கவனத்தை திசை திருப்பவும், என்னை ஊருக்கு போகச் - செய்யவும் ஒரு மாதம் அமைதியா இருந்து இருக்கலாம்!


நமது அடுத்த நடவடிக்கை என்ன?
டிரிங்
ஏதாவது தடயம் கிடைக்காமல் நாம் செயல்படுவது கடினம்!
அப்போது போன் அடித்தது.

போனை ஆசாத் எடுத்தார்.

ஆசாத் பேசறேன்.

சார்! காணாமல் போன வேனின் டிரைவர், காவலாளி ஆகியோரைக் கண்டுபிடித்து விட்டோம்!

பாங்கி வேனை கண்டுபிடித்த இடத்துக்கு ஆசாத்தும் போலீசாரும் விரைந்தனர்.



நாங்கள் பார்த்தபோது, இவர்கள் கைகளும் கால்களும் கட்டப்பட்ட நிலையில் கிடந்தனர்.



வேனை கொள்ளையர் தீவைத்து கொளுத்தி விட்டனர்.




இனி அந்த வேன் ஒன்றுக்கும் உதவாது!


வேன் டிரைவரை ஆசாத் விசாரித்தார்.
பயப்படாமல், என்ன நடந்தது என்பதை விவரமாகச் சொல். உன் வாக்குமூலம்தான் முக்கியம்!
சரி சார்!


"வழக்கம் போல் நாங்க மெயின் ரோடு வழியாக வந்துகொண்டு இருந்தோம்!"


திடீர் என்று ஒரு இன்ஸ்பெக்டர் வேனை நிறுத்தினார்.
என்ன சார்?
உன் டிரைவிங் லைசென்சை காட்டு!


"வழக்கமான போலீஸ் சோதனை என்று நினைத்தேன்."
சத்தம் போட்டால், உன்னைக் கொல்வேன். உன் குழந்தைகள் அனாதை ஆகும்!


நான் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தேன்.


"பிறகு பில்லா என்ற ஆள் என் இடத்தில் அமர்ந்தான்!"


வேன் காவலாளிகள் என்ன செய்தார்கள்?


உடனே காவலாளி பேசினான்.
திடீர் என்று என்னை தலையில் தாக்கி விட்டனர்.


அடுத்த காவலாளி என்ன செய்தான்?
அவன் கொள்ளையரை எதிர்த்தான்.


"ஆனால் அவன் சுட்டுக் கொல்லப்பட்டான்"


என் கைகளை கட்டி வாயில் துணியை அடைத்து பிறகு இங்கே கொண்டு வந்தனர்.

மேற்கொண்டு நடந்த விசாரணையில் கொள்ளை அடித்தவர்கள் குருதத், பில்லா, தாஸ், மல்லிகா 4 பேர் என்பதை ஆசாத் தெரிந்துகொண்டார்.







புனா புறப்படும் முன் ஆசாத் இன்ஸ்பெக்டர் காமத்திடம்—




ஆசாத், தன்னந்தனியாக புனா நெடுஞ்சாலையில் விரைந்தார்.

















உடைகளை ஆசாத் சோதனை போட்டார். ஒரு தாள் அகப்பட்டது. அது அவருக்கு எழுதப்பட்ட ஒரு கடிதம். அதை வாசித்தார்—




கடிதத்தில்—

இதற்கு மேல் ஒரு அடி எடுத்து வைத்தாலும், இந்த போலீஸ்காரர் கதிதான் உமக்கும். கடைசியா எச்சரிக்கிறேன்.

—குருதத்.


அஞ்சா நெஞ்சன் ஆசாத், குருதத் எச்சரிக்கையைக் கண்டு பயப்படாமல் புறப்பட்டார்.


தனியாக இருக்கும் இந்த வீடு! கார்! சந்தேகமா இருக்கே!


ஆசாத் மறைந்துகொண்டு அந்த வீட்டை கண்காணித்தார்!
விமான நிலையத்தில் இருந்து குருதத்தை ஏற்றிச் சென்ற அதே கார்!


உள்ளே!
தாஸ்! இந்த பெட்டியை உடை!


5 நிமிடத்தில் அந்த பெட்டியின் பூட்டை தாஸ் லாவகமாக திறந்தான்.
வாரே வா!
கட்டு கட்டாக நூறு ரூபாய் நோட்டுகள். ஆகா!


வெளியே ஏதோ சத்தம் கேட்டதே!
அது ஒரு காக்கி-சட்டை!


என் கண்களில் இருந்து அவ
தப்பவில்லை. அவனை சுட்டுவிட்டேன்!


உடனே மூவரும் வெளியே வந்து பார்த்தனர்.
எங்கே மறைந்தான்!
இதோ ரத்தம்!


மல்லிகா! நீ பார்த்த காக்கி சட்டை எப்படி இருந்தான்?


போலீஸ் அதிகாரி மாதிரி இருந்தான். நீண்ட எடுப்பான மூக்கு. துருதுருக்கும் கண்கள்.
அதுதான் ஆசாத்!


ஆசாத்தை பிடிக்கும் வரை பணத்தை பங்கு போட முடியாது!




திடீர் என்று ஒரு மோட்டார் சைக்கிள் உருமும் ஓசை கேட்டு திடுக்கிட்டனர்.










ஆசாத் பறந்து கொண்டு இருந்தார்.
அவரது இடது கையில் காயம் ...


ஒரு டாக்டரை பார்த்து சிகிச்சை பெறணும்!


எல்லா டயர்களும் பஞ்சர் ஆகிவிட்ட நிலையில், மேலும் கால தாமதத்தை தவிர்க்க அனைவரும் ரோட்டுக்கு வந்தனர்.
அதோ ஒரு கார் வருது!
தடுத்து நிறுத்துங்க!
எப்படியாவது "லிப்ட்" கேட்டு ஏறிக்கொள்ளணும்!


கை காட்டியதும் கார் நின்றது.


யார் நீங்க? என்ன வேண்டும்?


தொந்தரவுக்கு மன்னிக்கணும். எங்க கார் ரிப்பேர்!
புனாவுக்கு அவசரமா போகணும்.


சரி, ஏறிக்கொள்ளுங்க!


கார் புறப்பட்டது.
மேடம் நீங்க நடிகை சுரேகாதானே!
ஆமா.


புனாவில் சினிமா படப்பிடிப்பு. அதுக்குதான் போய்க்கொண்டு இருக்கேன்! நீங்க யார்?


கார் புனா நகரை அடைந்ததும் நான்கு பேர்களும் இறங்கிக்கொண்டனர்.
மிஸ் சுரேகா! நன்றி! உங்களை சந்தித்தது எங்கள் பாக்கியம்!
இவர்களைப் — பார்த்தால் சந்தேகமா இருக்கு!

ஒரு தனியார் ஆஸ்பத்திரியில் ஆசாத்.

ஆசாத்! கைக்கு கட்டு போட்டு-விட்டேன்.




ஐயோ டாக்டர். அது முடியவே முடியாது. அவசர வேலை இருக்கு.

அப்போது கொள்ளையர் 4 பேரையும் ஆசாத் பார்த்தார்.



ஆஸ்பத்திரி உள்ளே—

கையில் காயம் பட்டதை வைத்து அவர்கள் இங்கே வந்து விசாரிக்கிறார்கள்.

அவர்கள் யார்? உங்களை ஏன் தேடணும்?




அவர்கள் ஒரு பாங்கி வேனைத் தாக்கி 50 லட்சம் கொள்ளை அடித்துவிட்டனர். அவர்களை நான் பிடிக்க முனைந்தேன்.

எனக்கு இப்போ புரிகிறது!







கொள்ளையர் 4 பேர்களும் ஆசாத் இருந்த அறை கதவை தட்டினர்.
யார் அது?


கதவைத் திறங்க டாக்டர்! ஒரு அவசர கேஸ்!


டாக்டர், கதவைத் திறந்து—
எங்கே அந்த அவசர கேஸ்?


அந்த அவசர கேஸ் நோயாளி எங்கே என்று நீங்க சொல்லுங்க.


ஆசாத் எங்கே?


அவர் சிகிச்சை பெற்றதும் இங்கு இருந்து போய்விட்டார்.


டாக்டர் பொய் சொல்றீங்க. ஆசாத் மோட்டார் சைக்கிள் ஆஸ்பத்திரி முன் நிற்குது!


அப்போது ஸ்டெச்சரில் தப்பிய ஆசாத் எழுந்துகொண்டு—
நண்பர்களே, நன்றி. இனி தப்பி விடுவேன்.


ஆசாத் மோட்டார் சைக்கிளை அடையும் போது—
ஆசாத்! என்ன அவசரம் அப்படி? எங்கே போறீங்க? இந்தத் தடவை என் துப்பாக்கி குறி தப்பாது!


அதைக் கேட்டு ஆசாத் திடுக்கிட்டு நின்றார். மல்லிகா துப்பாக்கியை குறி வைத்தாள்.
ஓகோ, இதுக்கு முன் என்னைச் சுட்டது நீதானா?
ஆமா.


இந்தத் தடவை
என் குண்டு உம்
நெஞ்சைத்
துளைக்கும்.


அப்போது அவள் கையை, ஒரு கை
தாக்கியது.
ஆ!


மல்லிகாவைத் தாக்கியது,
நடிகை சுரேகா.
ஐயோ!




ஆஸ்பத்திரிக்குள் 3 கொள்ளையரும்
ஒவ்வொரு படுக்கையாக ஆசாத்தைத்
தேடினர்.
அந்த ஆசாத்
எங்கே மறைந்து
கொண்டான்?


அப்போது—
நன்றி! சுரேகா
உண்மையிலேயே
நீ நல்லா சண்டை
போட்டாய்!


மோட்டார் சைக்கிள் சத்தம் கேட்டு 3 கொள்ளையரும் பரபரத்தனர்.
ஆசாத் மீண்டும் தப்புகிறான்!


ஆஸ்பத்திரி அருகே ஒரு குதிரை லாயம் இருந்தது. கொள்ளையர் அங்கே போய்—
ஆளுக்கு ஒரு குதிரையில் ஏறு!


குரு! மல்லிகாவை விட்டு—விட்டோம்!
இனி அவள் நமக்கு பயன்பட மாட்டாள்! முதலில் ஆசாத்தை பிடிப்போம்.


ரோடு, குண்டும் குழியுமா இருக்கு. அதனால் ஆசாத் ரொம்ப தூரம் போய் இருக்க முடியாது. நாம் குறுக்கு வழியா போவோம்.
ஆமா, அதுதான் சரி!


ஆசாத்துடன் சுரேகா பறந்துகொண்டு இருந்தாள்.
ஆசாத்! என் காரை புனேவில் விட்டு வந்தேன். என்ன ஆச்சோ?


சுரேகா! கவலையை விடு. அடுத்த போலீஸ் நிலையம் போனதும், அதுக்கு ஓர் ஏற்பாடு செய்யலாம்.


நான் இந்நேரம் படப்பிடிப்பில் இருக்க வேண்டியவள். அவர்கள் தேடுவார்கள்.


அவர்களுக்கும் தகவல் கொடுக்கலாம். நீ சீக்கிரம் படப்பிடிப்புக்கு போகலாம்.


சுரேகா, தன் காரில் வந்த 4 பேர் மீது சந்தேகம் கொண்டு ஆசாத்தைக் காப்பாற்ற வந்ததைக் கூறினாள். திடீர் என்று—
ஆசாத் ஆபத்து!
ஆமா, அவர்கள் தான் கொள்ளையர்கள்!


ஆசாத்! இனி நீ தப்ப முடியாது. கீழே இறங்கு.


பிறகு—
ஆசாத்! உன் இஷ்ட தெய்வத்தை வேண்டிக் கொள். உன்னை பரலோகம் அனுப்பப் போகிறேன். இந்த சுரேகா, இனி எங்களுக்கு விருந்து!
குரு ஆசாத்தை குறி வைத்தான்.


குருதத் ஆசாத்தை சுடப் போன நேரம், பில்லா தடுத்து—
குரு! ஒரு நிமிடம் நில்! டாக்டர் போலீசுக்கு தகவல் கொடுத்து இருப்பார். இந்நேரம் போலீஸ் உஷார் அடைந்து இருப்பாங்க. நம்மை நாலாபுறம் வலைவீசி தேடுவாங்க.


நாம் போலீஸ் பிடியில் இருந்து தப்புவது கடினம்.
அதனால்?


அதனால், நாம் பாஸ் மஸ்தானுடன் தப்பி ஓடும் வரை இவர்களை பணயக்-கைதிகளா வைப்போம்!
அதுவும் சரிதான்


தாசை அனுப்பி கொள்ளைப் பணத்தை கொண்டுவரச்-செய்வோம்!


அடுத்த கணம் தாஸ் மோட்டார் சைக்கிளில் புறப்பட அந்த வாய்ப்பை எதிர்பார்த்த ஆசாத்-
ஐயோ குரு! போயும் போயும் அந்த தாசையா நம்புகிறாய்? அவன் அவ்வளவு பணத்துடனும் ஓடிவிடப்-போகிறான்.
என்ன?


பணம் முழுவதையும் தாஸ் அபகரித்துக் கொள்வான் என்று ஆசாத் கூறியது குருதத்தை யோசிக்கச் செய்தது.
பில்லா! தாஸ் நம் முதுகில் குத்துவான் என நீ நினைக்கிறாயா?
அவன் நமக்கு துரோகம் செய்யலாம்.

ஆசாத் சந்தேகப்பட்ட மாதிரியே தாஸ் மனதில் சுயநல திட்டம் உதித்தது!




மறைந்து இருந்த போலீசார் தாஸ் போவதைப் பார்த்தனர்.




பணம் இருந்த பங்களாவை தாஸ் அடைந்தான்.







அடுத்த நிமிடம்—




சரண் அடைவதைத் தவிர தாசுக்கு வேறு வழி இல்லை.

Scanned by CamScanner


வெகு நேரம் காத்திருந்த குருதத்தும், பில்லாவும் பொறுமை இழந்தனர்.
பில்லா! இனியும் இங்கே இருந்து பலன் இல்லை! நாம் தாசைத் தேடி போவோம். இவர்கள் இங்கேயே சாகட்டும்!


தண்ணீர்! தண்ணீர்!
மணிக்கணக்காக கட்டப்பட்டு இருந்த சுரேகா களைத்துப் போனாள்!


நடுக்காட்டுக்குள் மாட்டிக்கொண்டோம்! ரோட்டுக்குப் போக ஒரு மைலாவது நடக்கணும். என்னால் உனக்கு கஷ்டம்!


அப்போது ரோட்டில் ஒரு லாரி வந்து கொண்டு இருந்தது.


இப்படி மோசமான பாதையை நான் பார்த்ததே இல்லை!
பெரிய குழி இருக்கு!


அந்த சகதி குழியில் ஒரு டயர் மாட்டிக்-கொண்டது.


அப்போது, லாரியில் இருந்த சில பொருட்கள் கீழே விழுந்தன!
ஏய்! என்ன அது?


பல்பீர்! அந்த சேவல் தப்பி ஓடுது!


வா! ஓடிப் போய் பிடித்து வருவோம்!


காட்டுக்குள் ஓடிய சேவலை டிரைவர் பல்பீரும், கிளீனரும் பின்தொடர்ந்தனர்.
காட்டுக்குள் எவ்வளவு தூரம் வந்துவிட்டோம்.
அப்படி இருந்தும் பிடிக்க முடியவில்லையே!


கிட்ட தட்ட ஒரு மைல் போனதும் எதிர்பாராத வகையில் ஆசாத்தையும் சுரேகாவையும் பார்த்தனர்.
ஏய்! என்ன இது?
அவள் சினிமா நடிகை சுரேகா!


டிரைவர் காதில் எதையோ கிசுகிசுத்த கிளீனர், சுரேகாவின் கட்டை அவிழ்த்தான்.
ஆசாத்! பெரிய நரக வேதனைக்குப் பிறகு விடுதலை. இவர்கள் இருவரும் நல்லவர்கள். இவர்களுக்கு நன்றி!


என் கட்டையும் அவிழ்த்து விடு!
ஆனால் ஆசாத் கட்டை அவர்கள் அவிழ்க்கவில்லை!


அழகு நடிகையே! எங்கள்
கனவுக் கன்னியே!
வா, லாரிக்கு!


லாரியில் மது
பாட்டில்
இருக்கு,


ஐயோ!
பாவிகளே என்னை
விடுங்க!
எங்கள்
இஷ்டப்படி
நடந்தால் உனக்கு
நல்லது.
இல்லை...
டிரைவர் பல்பீரும், கிளீனரும் சேர்ந்து சுரேகாவை
லாரிக்கு இழுத்துச் சென்றனர்.


ஆசாத்! உதவி!
பிளீஸ்! ஏதாவது
செய்யுங்க!
கடவுளே!


ஆசாத் செய்வது அறியாது
திகைத்தார்.
சுரேகா
கற்பை
காப்பாற்ற-
வேண்டுமே!

கைகளைக் கட்டி இருக்கும் கயிற்றை அறுக்க, ஆசாத் பலம் கொண்ட மட்டும் போராடினார். ஆனால் முடியவில்லை. அவர் அருகே மின்னிய ஒரு பொருள் அவர் கருத்தைக் கவர —




ஆசாத் கஷ்டப்பட்டு கால் விரலால் அந்த கண்ணாடி துண்டை எடுத்தார்.




சுரேகாவை குடிக்கச் சொல்லி பல்பீர் வற்புறுத்தினான். ஆனால் அவள் உறுதியாக மறுத்துவிட்டாள்.






ஆத்திரம் கொண்ட கிளீனர் சுரேகாவை அடித்தான்.




குடிக்க சுரேகா மறுத்தாள். உடனே அவள் வாயில் பலவந்தமாக மதுவை ஊற்ற இருவரும் முயற்சி செய்கையில் ஆசாத் அங்கே தோன்றினார்!
யார் அது?
எப்படி கட்டை அவிழ்த்தான்?


ஒரு பெண்ணை இப்படி அவமானப்படுத்துவதா? அதுவும் ஒரு போலீஸ் அதிகாரி முன்னால்?
என்னது போலீசா?
ஆனால் ஆசாத்தைக் கண்டு டிரைவரும், கிளீனரும் பயப்படவில்லை.


பல்பீர்! நீ அவளை பார்த்துக்கொள். இந்த காக்கிச் சட்டையை ஒரு கை பார்க்கிறேன்.
கிளீனர் ஒரு கத்தியை உருவிக்கொண்டு ஆசாத் மீது பாய்ந்தான்.


குண்டு பாய்ந்து காயம் பட்டு இருந்தாலும் ஆசாத், ஆபத்தை சமாளிக்க தயார் ஆனார்.


கிளினர் வேகமாக குத்த வந்தபோது, ஆசாத் குனிந்து தப்பினார்.


அடுத்த தடவையும் லாவகமாக தப்பித்து அவன் கையை பற்றினார்.
ஆ!


பிறகு அவன் கையை முறுக்கி தூக்கி அடித்தார்.

அந்தரத்தில் ஒரு குட்டிக்கரணம் அடித்த கிளீனர் தரையில் விழுந்து மயக்கம் அடைந்தான்.



அவன் கத்தியை எடுத்துக்கொண்டு டிரைவர் மோத இருந்தபோது அவன் தலையில் பலத்த அடி விழுந்தது.




அடுத்த நிமிடம்!




குதிரையில் பறந்து வந்த குருதத்தும், பில்லாவும் பங்களாவை அடைந்தனர்.




பங்களாவுக்குள் போய் பார்த்தபோது அங்கே மறைந்து இருந்த போலீஸ் அதிகாரி ஒருவர்




போலீஸ் அதிகாரி அங்கு இருப்பதை அறிந்துகொண்ட இருவரும் சுட ஆரம்பித்தனர்.



அடுத்த கணம், மாடியில் மறைந்து நின்று சுட்ட அந்த போலீஸ் அதிகாரி பிணமாக கீழே விழுந்தார்.

வாவ்!

பில்லா! தாசை போலீசார் பிடித்துவிட்டார்கள் என்பது உறுதி ஆகிவிட்டது. ஆனால் கொள்ளைப் பணம் என்ன ஆச்சு என்பதுதான் தெரியவில்லை!

குருதத்தும், பில்லாவும் கொள்ளைப் பணத்தை மறைத்து வைத்து இருந்த இடத்துக்கு போய் பார்த்தார்கள்.

இந்தா இருக்கு!

50 லட்ச ரூபாய். எல்லாம் நமக்கே!

அப்போது தூரத்தில் போலீஸ் காரின் "சைரன்" (சங்கு) சத்தம் கேட்டது.

என்ன அது?

குரு! சீக்கிரம் கிளம்பு!


உடனடியாக அவர்கள் கொள்ளைப் பணத்துடன் குதிரையில் ஏறி தப்பித்தனர்.
அதோ போலீஸ் வேன்கள் பங்களாவை நோக்கிப் போகின்றன!


கொஞ்ச நேரத்தில் இந்த இடம் முழுவதும் வலை விரித்து தேடுவார்கள்!


அரை மணி நேரத்தில் அவர்கள் நடுக்காட்டை அடைந்ததும்,
பில்லா! உயிர் மேல் ஆசை இருந்தால் எங்காவது ஓடிவிடு. இல்லை, உன் தலையை குண்டுகள் துளைக்கும்!
பில்லா திடுக்கிட்டான்.


குரு, நான் மஸ்தானை பார்க்க வேண்டும். அதற்கு அனுமதி! அவர் படகுத்துறையில் நமக்காக காத்து – இருப்பார்!


பேசிக்கொண்டு இருக்கும்
போதே குரு துப்பாக்கியால்
சுட்டான்.
டுமீல்


ஆ! ஐயோ.


அதே நேரத்தில் அங்கே ஆசாத்தும்
சுரேகாவும் லாரியில் வந்தனர்.
ஆசாத்! துப்பாக்கி
வெடிக்கும்
சத்தம்!
அந்த சத்தம்
வந்த திசையில்
போகிறேன்.


பில்லாவைக் கொன்ற குருதத்—
இப்போது
50 லட்சம்
ரூபாய் இருக்கு.
நானும்
மஸ்தானும்
பங்கு
போடுவோம்.
படகுத்துறையை நோக்கி குரு
புறப்பட்டான்.


பாங்கிக் கொள்ளைக்கு திட்டம் வகுத்த மஸ்தான் படகுடன் காத்து இருந்தார்.
குரு! நீ
7 மணி நேரம் தாமதமாக
வருகிறாய்!


சோதனை மேல் சோதனை. நான் வந்ததே பெரிய காரியம்.


மற்றவர்கள் எங்கே?


மல்லிகா தாஸ் இருவரையும் போலீஸ் பிடித்து விட்டது.


பில்லா எங்கே?
பில்லாவா?


குருதத் ஒரு கணம் தயங்கி, பின்—
அவன் பிரிந்து போய் விட்டான்.
அவன் பங்கை வாங்காமல் போக மாட்டானே!


மஸ்தானுக்கு சந்தேகம் ஏற்பட்டது.
அதோ ஒரு லாரி!
இரு! அவசரப்படாதே!


அவர்கள் அருகே லாரி வந்து நின்றது. சுரேகா இறங்கி—
குருதத்! இதோ நீ கொஞ்ச நேரத்துக்கு முன் கொன்ற பில்லாவின் பிணம்!


பில்லா பிணத்தைப் பார்த்து மஸ்தான் ஆத்திரம் அடைந்தார்.
குரு! நீ அவனை கொன்றுவிட்டு பொய் சொல்லிவிட்டாய்!
பணம் நமக்கு மட்டும் கிடைக்க அப்படிச் செய்தேன்.


டுமீல் டுமீல்.
உன் பேராசை உன்னே அழிக்கட்டும்!


குருதத் பிணமாக சாய்ந்தான்.
அவனே கொன்று விட்டீர்!


நீ யார்?
என் பெயர் சுரேகா. நடிகை. படப்பிடிப்பில் கலந்துகொள்ள டைரக்டருடன் வந்தேன்.


அவர் உம் பின்னால் நிற்கிறார்.


மஸ்தான் திரும்பி பார்க்க, ஒரு துப்பாக்கி குறி பார்ப்பதை உணர்ந்தார்.
மஸ்தான்! துப்பாக்கியை கீழே போடு!


துப்பாக்கியை அவர் கீழே போட்டார்.
இனி கைகளை மேலே தூக்கு!


இரண்டு துப்பாக்கிகள் இடையே மஸ்தான் —
சுரேகா! அந்த துப்பாக்கியை எடு!


துப்பாக்கியை எடுக்க சுரேகா குனிந்தபோது, மஸ்தானின் பருந்து ஆசாத்தை திடீர் என்று தாக்கியது.
கிரீச்
கிளட்டர்
பிளட்டர்.


ஆ!


அந்த சந்தர்ப்பத்தை மஸ்தான் பயன்படுத்தி—


அடுத்த விநாடி மஸ்தான் தண்ணீருக்குள் பாய்ந்தார்.
எந்திரப் படகுக்குப் போய் ஏறி தப்பி ஓடிவிடலாம்.


ஒரு துடுப்பு படகில் ஆசாத் பின்தொடர்ந்தார்.


அப்போது அந்த வல்லூறு மீண்டும் அவரைத் தாக்கியது.
இது கண்ணை கொத்திவிடக் கூடாது.


கூரிய நகத்துடன் அந்த ராஜாளி ஆசாத்தை பயங்கரமாக தாக்கியது.
கிரீச்... கிரீச்...
எனது பருந்து அவனை விடாது!


பருந்து தொடர்ந்து தாக்கிய நேரத்தில் மஸ்தான் படகில் ஏறினார். பருந்து தாக்கியதைப் பார்த்து சுரேகா—
அதை சுட்டு வீழ்த்தாவிட்டால், ஆசாத்துக்கு ஆபத்து!


அவள் குறி வைத்தாள்.
டுமீல்!
மஸ்தானை பிடிக்க கடைசி சந்தர்ப்பம்.


கிரீச்


பருந்து இறந்து விழுந்த அதே நேரம் மஸ்தான் இயந்திரப் படகை இயக்கினார்.
மோட்டார் படகில் ஒரு கயிறு இருக்கு. அதை பிடித்தால்...


அடுத்த கணம் அந்த கயிற்றை ஆசாத் எடுத்தார் இயந்திரப் படகு வேகமாக புறப்பட..., அவர் அந்த கயிற்றை நன்கு பிடித்துக்கொண்டார்.
உம்...


இயந்திரப் படகு வேகமாக போக, அதனுடன் இணைந்த கயிரை ஆசாத் பிடித்துக்கொண்டதால், சிறிய படகு பின்தொடர்ந்தது!
மஸ்தானை பிடிக்க இதுவே கடைசி உபாயம்!


கயிரை பிடித்தபடியே, அதை இழுத்து இடைத் தூரத்தை குறைத்தார்.
படகு கவிழ்ந்துவிடக்கூடாது. அதனால் சீக்கிரம் மோட்டார் படகை அடையணும்!


அரை மணி நேர போராட்டத்துக்கு பின் ஆசாத் மோட்டார் படகை எட்டினார்.
மஸ்தானுக்கு தெரியாமல் படகில் ஏறணும்!


ஆனால் மஸ்தான் அங்கே கத்தியுடன் நின்றார்.
வரவேண்டும், ஆசாத்!


ஆசாத் திகைத்தார்!
நடுக்— கடலில் சாக வேண்டும் என்பது உன் விதி.


உனக்கு பின்னால் சுறா மீன்களும் தயாராக வருது!


சுறாவிடம் சாகிறாயா? என் கத்திக்கு பலியாகிறாயா?
திடீர் என்று பெரிய ஆபத்து சூழ்ந்துவிட்டதை ஆசாத் அறிந்து திடுக்கிட்டார்.


ஆசாத்தின் சமயோசித புத்தி வேலை செய்தது. அவர் மஸ்தானிடம்—
ஓகே மஸ்தான். நாம் இருவரும் ஒரு ஒப்பந்தம் செய்துகொள்வோம். முதலில் நான் மேலே வருகிறேன்!


அப்படி வழிக்கு வா. நான் சொல்வதை கேட்டால் உனக்கு நல்லது.


கயிற்றை பிடித்து ஒரு துள்ளு துள்ளி, ஆசாத் படகில் போய் குதித்தார்.


அதே வேகத்தில் மஸ்தானை தாக்கினார்.
தட்!


சரமாரியாக குத்துகள் விழுந்தன.
நச்!

அந்த திடீர் தாக்குதலால் நிலைகுலைந்த மஸ்தான், கடலில் விழுந்தார்.



அவரை சுறாக்கள் சூழ்ந்தன.




மஸ்தான் சுறாக்களுக்கு பலியான பின் ஆசாத் கரை திரும்பினார். வீர வரவேற்பு அவருக்கு காத்து இருந்தது.



முற்றும்

ராணி சிண்டிகேட் சார்பில் வெளியிட்டவர். ஆசிரியர்: எஸ்.ராமஜெயம். 1091,பெரியார் நெடுஞ்சாலை, சென்னை–600 007. அச்சிட்டவர்: சி.கல்யாணசுந்தரம். ராணி அச்சகம்,1091,பெரியார் நெடுஞ்சாலை, சென்னை–600 007.




கல்யாண் புனிதா

# 4. பூ — பூகம்பம்!

சிங்கப்பூர் ஏர்-லைன்ஸ் விமானம் அது.

சிங்கப்பூரில் இருந்து சென்னை புறப்பட தயாராக நின்றிருந்தது.

400 பயணிகளும் முண்டி அடிக்காமல் ஏறிக்கொண்டு இருந்தார்கள்.

எல்லோரும் ஏறட்டும் என்று சாவதானமாக நின்றுகொண்டிருந்தான், கல்யாண்!

விமானத்துக்கு வேகமாகச் சென்றுகொண்டு இருந்த ஒரு பணிப் பெண்ணை வழிமறித்து, "இந்த விமானம் இன்னும் அரை மணி நேரத்தில் புறப்பட்டுவிடுமா?" என்று கேட்டான். விமானம் புறப்படுவதற்கு 10, 15 நிமிடத்துக்கு முன்னால்தான் பயணிகள் ஏற்றப்படுவார்கள் என்று கல்யாணுக்கு நன்றாகத் தெரியும்.

என்றாலும் ஒன்றும் தெரியாத அப்பாவி போல், அந்தப் பெண்ணிடம் கேட்டான்.

"நோ. நோ. 10 நிமிடத்தில் புறப்பட்டுவிடும். சீக்கிரம் ஏறுங்க!" என்ற அந்தப் பணிப் பெண், "ஏய்! கிண்டல்தானே! இதே பிளேட்டில் உங்களை பல தடவை பார்த்து இருக்கிறேன்!" என்று கூறி "களுக்!" என்று சிரித்துவிட்டு நகர்ந்தாள்.

அந்த சிரிப்பைதான் எதிர்பார்த்தவன் போல், "வெரிகுட்!" என்று புன்னகைத்தான்.

பணிப் பெண் நடந்து செல்லும் பின் அழகை கல்யாண் கண்காணித்தான்.

"உம்! இவளுக்கு 55 மார்க் கொடுக்கலாம்!" — கல்யாண் தனக்குத் தானே கூறிக் கொண்டான்.

கல்யாண் தன்னை பெரிய ரசிகனாக நினைத்துக்கொள்வான். பெண்களைப் பார்த்து ரசிப்பதில் அவன் கில்லாடி.

அழகான பெண்களுக்கு அவன் மார்க் போடுவான்.

75 மார்க்குகளுக்கு அதிகமாக வாங்கும் சூப்பர் அழகிகளை

மட்டும் அவன் இரண்டாவது தடவை, மூன்றாவது தடவை என்று உற்றுப் பார்ப்பான்.

பெண்களை அப்படி ரசிப்பதற்கு அவன் வெட்கப்படுவது இல்லை. ஒரு வாய், ஒரு மூக்கு என்று படைத்த கடவுள் இரண்டு கண்களைப் படைக்க காரணம் என்ன? "அழகை ரசிக்கத்தான்!" என்பான்! அதையே கொஞ்சம் விஸ்தாரமாக்கி, "ஒரு கண் பார்த்து ரசிக்க! இன்னொரு கண், கண்சிமிட்ட!" என்று கூட அவன் வகைப்படுத்திச் சொல்வான்!

அதே மாதிரி 2 காதுகள் இருப்பது கேட்டு ரசிக்க. ஆம்; கல்யாண் நல்ல ரசிகன். மேல்நாட்டு இசை, நம் நாட்டு இசை இரண்டையுமே ரசிப்பான்.

கண்கள், காதுகள் இரண்டையும் நன்றாக ரசிக்கப் பயன்படுத்த வேண்டும் என்று அவன் தத்துவம் பேசுவான்.

விமானத்தில் எல்லோரும் ஏறிவிட்டார்கள்.

கல்யாண் மட்டும் கீழேயே நின்றிருந்தான்.

அதே விமானப் பணிப் பெண், "கல்லாண்...கல்லாண்...!" என்று குரல் கொடுத்தாள்.

அதன்பிறகே அவன் விமானத்தில் ஏறினன். அப்போதுதான் அவனுக்கு, தான் இப்போது "கல்யாண்" என்ற சொந்தப் பெயரில், பயணம் செய்வது நினைவுக்கு வந்தது.

விமான படிக்கட்டுகளை அனாயாசமாக தாண்டி, ஏறினன்.

தாமதமாக ஏறும் அவனை பல பயணிகள் முறைத்தார்கள். பலர், பார்த்து நக்கலாக புன்னகை பூத்தார்கள்.

எல்லாவற்றையும் தனக்குக் கிடைக்கும் பாராட்டாக எடுத்துக் கொண்டு, கல்யாண் தன் "சீட்"டில் போய் உட்கார்ந்தான்.

பயணிகள், பல மொழிகளில் மெதுவாக பேசுவது அவன் காதில் விழுந்தது.

அவன் அருகில் இருந்த பயணி, ஒரு ஆங்கில தினசரியில் முகத்தையே மறைத்தபடி மூழ்கி இருந்தார்.

"அருகில் அமர்வது யார் என்றுகூட தெரிந்துகொள்ள விரும்பாமல் பத்திரிகை படிக்கும் அந்த ஆசாமி, நிச்சயம் ஒரு தனிமை விரும்பியோ, இல்லை சிடுமூஞ்சியாகவோதான் இருக்க வேண்டும். ஆகவே சென்னை வரை வாய் மூடி மவுனியாகத்தான் செல்ல வேண்டும். பேச்சுத் துணை கிடையாது!" என்று பெருமூச்சு விட்டான், கல்யாண்!

விமானம் புறப்படுவதற்கான அறிவிப்பு கேட்டது.

பக்கத்தில் அமர்ந்து இருந்த ஆசாமி, அணிந்து இருந்த "ஜீன்ஸ்" கால்சட்டை, இந்தியாவைச் சேர்ந்த தையலாக காட்டிக்கொண்டு இருந்தது.

விமானம் புறப்பட்டதும் ஒருவர் சிலுவை போட்டு ஜெபம் செய்தார்.

உடனே கல்யாணுக்கு பக்தி பற்றிக்கொண்டது.

"முருகா! ஞானப்பண்டிதா! என்னை மட்டும் காப்பாத்துப்பா!" என்று அவனும் தமிழில், வேண்டுதல் நடத்தினன்.

அதைக்கேட்டு, பத்திரிகைக்குள் புதைந்து இருந்த ஒரு பூ முகம்,

முகிலைக் கிழித்து வெளிவரும் முழு நிலவு போல வெளிப்பட்டு, பின் மீண்டும் பத்திரிகை காகிதத்தினுள் சிறை பட்டுக்கொண்டது.

அவன் அதைப் பார்க்கவில்லை. காரணம் அவன் கண்கள் எதிரே வந்த இன்னொரு விமானப் பணிப் பெண்ணைப் பார்த்து மார்க் போட்டுக்கொண்டிருந்தன.

"விமானத்தில் ஒரு பார்த்த முகம் கூட இல்லையே!" என்று கல்யாண் மனதுக்குள் சலித்தான். "சென்னை வரை சங்கீதம்தான் துணை!" என்று அவன் சமாதானப் பட்டுக்கொண்டான்.

விமானம் மேலே கிளம்பி நிலையான வேகத்தை மேற்கொண்டது.

சக பிரயாணியின் "ஜீன்ஸ்" எடுப்பாக இருக்கவே, கல்யாண் அதை மீண்டும் ஒருமுறை பார்த்தான். இப்போது அவன் கண்களில் ஒரு சின்ன ஆச்சரியம்!

அந்த "ஜீன்ஸ்" கால்களுக்கு உரிய செருப்பு பெண்கள் அணியும் குதிகால் உயர்ந்த செருப்பு. அப்படியானால் அவன் அருகில் இருப்பது ஒரு பெண்ணா?

"வாரே, வா!" என்று மனதில் சந்தோச மிருதங்கம் அடித்த கல்யாண், பத்திரிகையை பிடித்து இருந்த அந்த கைகளை—இல்லை அழகான கைகளை பார்த்தான். இல்லை, மேய்ந்தான்.

ரோமங்களே இல்லாத, ரோமாபுரி சிலை போல் இருந்த "வழ வழா" கைகள்!

"ஐய்யோ!" கல்யாண் மனதுக்குள் ஐஸ்கிரீம் சப்பிக் கொண்டான்.

கை விரல்களை கல்யாண் பார்த்தான். இல்லை, ரசித்தான்.

இவ்வளவு நேர்த்தியாக கைகளைச் செய்ய அந்த இன்ஜினீயர் பிரம்மா எங்கே மோல்டு எடுத்தார்?

கையில் தங்கச் சங்கிலியுடன் டால் அடித்த சின்னக் கெடிகாரம், "நான் பெண்களுக்கு உரிய லேடீஸ் கெடிகாரமாக்கும்" என்று கல்யாணைப் பார்த்து கண் அடித்தது.

பதிலுக்கு கண் அடித்த கல்யாண் அருகில் இருப்பது பெண்தான். அதுவும் ஒரு அழகான பெண் என்று உறுதி செய்துகொண்டான்.

"அப்பாடா! ஒரு பெரிய அதிர்ஷ்டம்!" அவன் நிம்மதியாக மூச்சு விட்டான்.

"அந்த அழகான பெண் முகத்தைப் பார்க்க வேண்டும். அதுவும் உடனடியாக!" என்று அவன் மனம் அடம்பிடித்தது. எப்போதுமே கல்யாண் அவன் மனச்சாட்சி பக்கம்தான்.

"இப்போ அந்தப் பெண் முகத்தைப் பார்க்க வேண்டுமே? அதற்கு என்ன செய்யலாம்?"

"கல கல" என்று சிரிக்கலாமா? சீ...வேண்டாம். பைத்தியம் என்று அவளும் பக்கத்தில் உள்ளவர்களும் நினைப்பார்களே!

லேசாக ஒரு கையால் இடித்தால் என்ன? உம்...அது சரியான உத்தி. யாருக்கும் தெரியாமல் செய்யலாம். ஆனால் அவள் ஜன்னல் ஓரமாக பனிக்கு நடுங்கும் புள்ளிமான் போல ஒதுங்கி இருக்கிறாளே அவளை எப்படி இடிப்பது?

தூங்குவது போல் நடித்து அவள் மீது சாய்ந்தால் என்ன?

தீ அப்படி செய்ய வேண்டுமானால் பத்து நிமிடமாவது ஆகவேண்டும். கொஞ்சம் கொஞ்சமாகத் தூங்கிதானே மேலே சாய முடியும்?

பத்து நிமிடம் அவனால் தாக்குப்பிடிக்க முடியாதே!

அப்போ என்ன செய்யலாம்?

பலமா தும்மலாமா?

சரியான யோசனை!

"அ...ச்...அச்..."

—அந்த ராட்சத தும்மலைக் கேட்டு பல பயணிகள், கல்யாணை பரிதாபமாகப் பார்த்தார்கள்.

ஆனால் கல்யாண் அவர்களைப் பார்க்கவில்லை. அவனோ, அருகில் இருந்த பூச்செண்டு, தன் முகத்தைக் காட்டுகிறதா என்று பார்த்தான்.

பாவம், கல்யாண்! அவள் அவனைப் பார்க்கவே இல்லை!

அடுத்து என்ன செய்யலாம்?

தெரியாத மாதிரி அவள் காலை ஓங்கி மிதிக்கலாமா?

சேச்சே! அவள் கத்தி கலாட்டா செய்தால் என்ன ஆவது?

திடீர் என்று கல்யாண் மனதில் ஒரு சந்தேகம். இந்தப் பெண் காது செவிடாக இருக்குமோ?

அவன் அப்படித்தான் நம்பினான்.

அதனால், "சரியான செவிட்டு சனியன். இது பக்கத்தில் எனக்கு இடம் வாய்த்திருக்கே!"—கல்யாண் முணுமுணுக்க—



அதைக் கேட்டு அவள் ஆத்திரத்தில் பேப்பரை கசக்கிவிட்டு, கல்யாணைப் பார்த்து முறைக்க—

வெலவெலத்துப் போன கல்யாண், "சாரி! உங்களுக்கு தமிழ் தெரியுமா?" என்று கேட்டு அசடு வழிந்தான்.

அவள் ஆங்கிலத்தில் திட்டினாள்.

ஆகா! இவள்தான் என்ன அழகு? எவ்வளவு கொள்ளை அழகு? கல்யாண் அவள் முகத்தை ஏறிட்டு பார்த்தான்.

மீண்டும் மீண்டும் பார்த்தான்.

தலைமுடி, நெற்றி, உதடு, கன்னக் கதுப்புகள் என்று அவன் மார்க்குகளை போட்டுக்கொண்டே போக, மார்க் 92—ல் வந்து நின்றது!

அவன் இதுவரை இவ்வளவு அதிகமாக எந்தப் பெண்ணுக்கும் மார்க் போட்டதில்லை.

"சாரி! உங்களை சனியன் என்று கூறிவிட்டேன்!"—அவன் அவளிடம் பேச்சுக் கொடுத்தான்.

பேப்பரை மடக்கிவிட்டு, அவள் "பரவாயில்லை!" என்றாள்.

அவள் குரல் அவனுக்கு இனிமையாக இனித்தது.

அவன் பேச்சைத் தொடர்ந்தான்.

"சென்னைக்கா போகிறீர்கள்?"

"ஆமா!"

"சிங்கப்பூரிலா, விமானம் ஏறினீர்கள்?"

"இல்லை. டோக்கியோவில் ஏறினேன்."

"உங்கள் பெயரைத் தெரிந்து கொள்ளலாமா?"

"அவசியம் தெரியணுமா?"

"உங்கள் இஷ்டம். நீங்களும் தமிழ். நானும் தமிழ்! அதனால் தான் கேட்டேன்!"

"புனிதா."

"மிகவும் அழகான பெயர், உங்களைப் போல்!"

"சென்னையில் எங்கே இருக்கிறீர்கள்?"

"சென்னைக்கு அருகில் ராணிமங்கலம் கிராமம்!"

"ராணி மங்கலமா?"—கல்யாண் அதிர்ந்தான்.

"ஏன்? கூடாதா?"

"இல்லை. அது கிராமமாச்சே!"

"கிராமமா இருந்தால் என்ன? நான் இருப்பது அரண்மனையில். மகாராஜா வேடப்ப உடையார் அரண்மனையில்!"

கல்யாண் வாயடைத்துப் போனான்.

அவன் அருகே இருந்த பூ, பூகம்பமாய் வெடித்துவிட்டதே.

தலையை வலிக்கிறது என்று கூறி அவன் கண்களை மூடிக்கொண்டான்.

(இந்தக் கதையின் தொடர்ச்சி அடுத்த இதழில் வெளிவரும்).

# ரூ. 50-பரிசு: கருத்துப் போட்டி-33

"நடிகை சுரேகா" சித்திரக் கதையை படித்துவிட்டீர்கள் அல்லவா? இனி இந்தக் கதையில், உங்கள் மனதைக் கவர்ந்த சம்பவம் எது? அதற்கான காரணம் என்ன என்று உங்கள் கருத்தை, "ராணி காமிக்ஸ்", ஒரு பக்க அளவுக்கு மிகாமல், எழுதி அனுப்புங்கள்.

மிகச் சிறந்த கருத்துக்கு ரூ. 50 பரிசு வழங்கப்படும்.

தேர்ந்து எடுக்கப்பட்ட கருத்து. 1–4–86 இதழில் பிரசுரிக்கப்படும்.

கருத்துப் போட்டி நிபந்தனைகள்:—

(1) கருத்துக்கள் எங்களுக்கு வந்து சேரவேண்டிய கடைசி தேதி: 10–3–86. அதன்பின் வரும் கருத்துக்கள் போட்டிக்கு ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா.

(2) போட்டியில் கலந்து கொள்பவர்களுக்கு வயது வரம்பு கிடையாது.

(3) போட்டியில், ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. சட்டப்படி கட்டுப்படுத்த முடியாது.

(4) கீழே உள்ள பாரத்தை பூர்த்தி செய்து, "கருத்து"டன் சேர்த்து அனுப்ப வேண்டும். அது இல்லாமல் வரும் கருத்துக்கள் ஏற்றுக்கொள்ளப் படமாட்டா.




முகவரி:—
கருத்துப் போட்டி,
"ராணி காமிக்ஸ்",
1091, பெரியார்
நெடுஞ்சாலை,
சென்னை–600 007.

கருத்துப் போட்டி எண்: 33

பெயர்: ....................................

முகவரி: ....................................

....................................

....................................

....................................

போட்டி நிபந்தனைகளுக்கு கட்டுப்படுகிறேன்.

....................................

(கையொப்பம்)

## சந்தா விபரம்
(தபால் மூலம்)




ஒரு ஆண்டு ரூ. 36-00
ஆறு மாதம் ரூ. 19-00

ஆறு மாதத்திற்கு குறைந்த சந்தா ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

வி. பி. பி. கிடையாது.

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி:–
நிர்வாகி,
ராணி சிண்டிகேட்,
1091, பெரியார் நெடுஞ்சாலை,
சென்னை - 600 007.

## NOTICE

Statement of Ownership and other particulars about "RANI COMICS", Madras-7.

1. Place of Publications: 1091, Periyar High Road, Madras-600 007.

2. Periodicity of its Publications: Fortnightly

3. Printers Name: C. Kalyana sundaram,
Nationality: Indian.
Address: 1091, Periyar Higd Road, Madras-600 007.

4 &5. Name of Publisher & Editor: S. Ramajayam
Nationality: Indian
Address: 1091 Periyar High Road. Madras-600 007

6. Name and address of the Owner: M/s RANI SYNDICATE, 1091, Periyar High Road. Madras-600 007.

I, S. Ramajayam hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date: 1-3-86.

Sd/- S. Ramajayam,
PUBLISHER.

## கருத்துப் போட்டி எண்-31 முடிவு

"கடல் பூதம்!" சித்திரக் கதை கருத்துப் போட்டியில் கலந்து கொண்டவர்களில் எஸ். என். பி. அருணாசலம் (ஈரோடு), என். பத்மா (கடலூர்), ஆ. விசாலாட்சி ஆனந்தன் (வில்லிவாக்கம், சென்னை–49), எம். பி. ராஜா சித்தார்த்தன் (சிதம்பரம்), ஜி. உமா மகேஸ்வரி (திருமங்கலம்), ஜே. அம்சகுமாரி பி. காம். (அரச்சலூர்), த. சத்தியநாராயணன் (அயன்புரம், சென்னை–23), எஸ். ஸ்ரீதேவி (தாம்பரம்) ஆகியோர் சிறந்த கருத்துக்களை எழுதி இருந்தனர்

மிகச் சிறந்த கருத்தை அனுப்பியர் என்று தேர்ந்து எடுக்கப் பட்டு, ரூ. 50 பரிசு பெறுபவர்—

சித்திரப் பிரியா,
கவி இல்லம்,
154, சித்தார்த்தா நகர்,
டாக்டர் ராயன் சாலை,
பெங்களூர்–560 053

இவரது கருத்து வருமாறு:—

"வட கடல் எண்ணை கம்பெனிக்கு சொந்தமான, எண்ணைக் கிணற்றை, "கடல் பூதம்" போல் உலவும் நவீன நீர்மூழ்கி கப்பல், அழிக்க வரும்போது வேவு வீரர் ஜேம்ஸ்பாண்ட், பளு தூக்கி இயந்திரத்தின் கொக்கியில் நின்றுகொண்டு, ஒரு ஸ்பேனர், ஒரு பெட்ரோல் பாட்டில் இவற்றின் மூலமே அதை அழித்துவிடுகிறார். அதன் மூலம் எண்ணைக் கிணற்றை காப்பாற்று கிறார். 3 எண்ணை அதிபர்கள் இறந்தாலும், ஒரு அதிபரின் வாரிசான ஏஞ்சலையும் காப்பாற்றுகிறார்.

இந்த உச்சகட்ட காட்சி, சில படங்கள் மூலம் துல்லியமாக விளக்கப்பட்டு உள்ளது. நாவலாக எழுதினால் சில அத்தியாயங் களுக்கு நீளும். சினிமாவாக எடுத்தால், இந்த காட்சிக்கு பல லட்சம் செலவாகும்.

ஆனால், ஒரு சில படங்கள் மூலம் அந்த பிரமாண்டமான காட்சியை கண் நிறைய, நெஞ்சம் நிறைய காட்டிய காரணத் தால் அந்தக் கட்டம் என்னைக் கவர்ந்தது."

Scanned by CamScanner

RANI COMICS
(TAMIL FORTNIGHTLY)
Regd. No. TN/MS(N)/461

# ராணி காமிக்ஸ்

அடுத்த இதழில்...!

சட்டத்தைக் காக்க ஒரு கைதி நடத்திய வீரப் போராட்டம்!



# ஜெயில் கைதி!

முழு நீள சித்திரக் கதை!

சித்ரா மணாளன் எழுதும்,

## தொடர்கொலை!

திகில் தொடர்கதை!

ரூ.50 பரிசு: வாசகர் போட்டி!

ரூ. 1000 பரிசு கட்டுரை போட்டி!

படிக்கத் தவறாதீர்கள்!




15.3.86-ல் வெளிவருகிறது!

PRINTED AT RANI PRINTERS, MADRAS-7